உ

சிவமயம்.

பதினெண்சித்தர்களில் மகா மருத்துவம்பொருந்திய

# போகமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# ஜெனனசாகரம் - ௫௫

இஃது,

மதுரை-புதுமண்டபத்தில்

புஸ்தகயாபாரஞ்செய்யும் - ம - ள - ள -ஸ்ரீ,

சோ. சுந்தரராஜபிள்ளையவர்கள்

வேண்டுகோளின்படி,

ஷை-யூர் வயித்தியஞ்செய்யும்

கருப்பையாநம்பியவர்களால்

பற்பல - ஏட்டுப்பிரதிகளைக் கொண்டு

பிழையறப்பரிசோதித்து

திருநெல்வேலிப்பேட்டை

வ. மருதுராவுத்தரவர்களால்

வேலப்பாக்கம்

பொன்னுசாமிமுதலியாரது

பூமாதுவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1884



இதன்விலை-அணா—௮.



உ

சிவமயம்

# போகர்-ஜெனனசாகர-வகராதி.

| செய்யுண்முறை | பக்கம். |
| --- | --- |

அகராதி-முற்றிற்று.



உ

சிவமயம்.

இஃது - கோகுலாபுரம்

# அருணாசலமுதலியாரால்

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

---

ஆசிரியப்பா.

சீர்மலிதிலகீர் திக்கால்வாணமாய்
ஏர்மலிந்திலகு மிணையிலானருளால்
அணிமாவாதி யஷ்டசித்துகளுந்
திணிகொளுநியம தியானவஷ்டாங்க
யோகமும்வாய்ந்த வொருபதினெண்மருள்
போகமாமுனிவர் புகன்றவிந்நூலை
இடம்பெறவோங்கு மிருநிலமதனுள்
கடம்பவனமெனக் கழறாலவாயின்
வேதவாயினர்முதன் விளங்குநால்வருணரும்
ஓதற்கரிய வுயர்மண்டபத்திற்
பொற்புளோர்மகிழ புத்தகவர்த்தகம்
இப்புவிமதிக்க விழைத்திடும்புனிதனெந்
சுந்தரராஜ சுகுணனென்போனும்
பந்துமாய்க்கேட்டபண்பதுகொண்டே
ஆயுர்வேதத் தமர்ந்தசிலாக்யன்
தாயினுமினிய தயாளுனாமியோக்யன்
கறுட்டையாநம்பிக் காவலன்றனது
பொறுப்பெனவெண்ணிய புத்தியுண்மகிழ்வாய்
பற்பலவேட்டுப் பிரதிகளைக்கொண்டு
ஏற்படவெழுதி யிந்தவைதன்னைச்
சென்னையம்பதியிற் றிகழ்காராளருள்
நன்னயத்தோர்க்கெலா நல்கவென்றெண்ணும்
பொன்னுசாமியெனும் பூஜிதனமைத்த
மன்னுபூமாது வன்னேனைந்திரத்தில்
அச்சிட்டுலகெலா மார்ந்திடச்செய்த
உச்சிதமகம்மது வுயர்குலத்துற்ற
மருக்கொளுமிந்திரன் மருவியசீர்த்தியைப்
பருப்பவொலவர் பார்மிசைமாதோ.

சிறப்புப்பாயிரம்-முற்றிற்று.





சிவமயம்.

# போகமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# ஜெனனசாகரம் - ௫௫௰

## பாயிரம் - காப்பு.

அண்டரண்டங்கடந்தபொருள்சிற்குணமாய்நின்ற
அளவில்லாநிர்மலமேசூட்சாசூட்சம்
எண்டிசையும்பரந்துநிரஞ்சனமேயாகி
ஏகசச்சிதானந்தப்பாலஞானம்
கொண்டதொருபூரணமெங்காளுக்காப்பு
குறியானவொளியாளும்வெளியாளுக்காப்பு
புண்டரிகவெளியொளிப்பாள்சுழினைமோனம்
போதமுழும்வேதாந்தங்காப்புதானே. (௧)

## இதுவுமது.

ஆதியந்தம்வாலைகுருபாதம்போற்றி
அம்பிகையாள்சேயர்சித்தர்பாதம்போற்றி
நீதியென்றகாலாங்கியையர்பாதம்
நிலைபெறவேவணங்கிநன்றாய்த்தீட்சைபெற்று
சோதியென்றநதிமூலஞ்செப்பக்கேளு
சொல்லரிதாய்நின்றதொருசித்தர்மூலம்
ஓதிநின்றகணபதிவல்லபையின்மூலம்
உற்றுநின்றமூலமெல்லாமுரைக்கின்றேனே. (௨)

## நான்முகம் ஞானங்கூறல்.

உரைக்கிறேனுதித்தவொருவனைப்பா
வொருவனுமேவல்லபரப்பிரம்மம்
கரைக்கிறேனிவிருந்துகலைசிழுத்துக்
காலாகிப்பிரிந்துதிதிபின்னுமாகி
விரைக்கின்றவானுமதுபெண்ணுமாகி
விறைவாகபரிணுகலையும்பூண்டு
திரைக்கிறேனவனொருத்தியல்லாலில்லை
தேவியுடசிருஷ்டிப்பைச்செப்பக்கேளே. (௧)

கேளப்பாவவனுடையதியானத்தாலே
கெடியாகத்தான்பிரிக்குமூலம்பார்த்து
ஆளப்பாவந்தவொருமூலத்தாலே
வழகாகசிருஷ்டித்தானொருவனைத்தான்
வாளப்பாவொருவனுந்தான்வஞ்சகத்தால்
வந்தவழிசொல்லுமென்றான்வாலையைத்தான்
நாளப்பாவொருவனுமேயில்லையில்லை
பரப்பிரம்மமூலத்தாற்பிறந்தேன்பாரே. (௨)

---

## சிருஷ்டியின்கலைகள்கூறல்.

பாரப்பாபிரம்மமென்றசோதிக்குத்தான்
பரிவானகலையதுவாயிரத்தெட்டாகும்
சேரப்பாகாண்பிறந்தகலைகள்தானுஞ்
சேர்ந்ததடாவன்பத்தியொன்றுங்கூடி
ஆரப்பாவானுமொருபெண்ணுமான
வட்சரமதுதானுமைம்பத்தொன்று
வேரப்பாவொன்றுனவட்சரத்தால்
விதமெல்லாமறிந்ததடாயானுங்காணேன். (௩)

காணப்பாவைம்பத்தியொன்றுக்குத்தான்
கண்ணுகந்திறந்ததடாவொன்றுதானுந்
கோணப்பாவந்தவொருகண்ணிறுலே
குலங்கவேயான்பிறந்தமூலங்கண்டேன்

## நான்முகம்-ஞானங்கூறல்.

உரைக்கிறேனுதித்தவொருவனப்பா
வொருவனுமேவல்லபடாப்ரம்மம்ப்ரம்மம்
கரைக்கிறேனிவிருந்துகலைசிறுத்துக்
காலாகிப்பிரிந்துநிதிபிண்டமாகி
நிரைக்கின்றவானுமதுபெண்ணுமாகி
நிறைவாகடிறுகலையும்பூண்டு
திரைக்கிறேனவனொருத்தியல்லாவிலே
தேவியுடசிருஷ்டிப்பைச்செப்பக்கேளே. (௧)

கேளப்பாவவனுடையதியானத்தாலே
கெடியாகத்தான்பிரிந்தமூலம்பார்த்து
ஆளப்பாவந்தவொருமூலத்தாலே
வுறகாகசிருஷ்டித்தானொருவனைத்தான்
வாளப்பாவொருவனுந்தான்வஞ்சகத்தால்
வந்தவழிசொல்லுமென்றுவாலையைத்தான்
பாளப்பாவொருவனுமேயில்லையில்லை
பாப்ரம்மமூலத்தாற்பிறந்தேன்பாரே. (௨)

---

## சிருஷ்டியின்கலைகள்கூறல்.

பாரப்பாப்ரம்மமென்றசோதிக்குத்தான்
பரிவானகலையதுவாயிரத்தெட்டாகும்
சேரப்பாசான்பிறந்தகலைகள்தானுந்
சேர்ந்ததடாவன்பத்தியொன்றுங்கூடி
ஆரப்பாவாணுமொருபெண்ணுமான
வட்சாமூமதுதானுமைம்பத்தொன்று
வேரப்பாவொன்றுணவட்சாத்தால்
விதமெல்லாமறிந்ததடாயானுக்கானேன். (௩)

காணப்பாவைம்பத்தியொன்றுக்குத்தான்
கண்ணுகத்திறந்ததடாவொன்றுதானுங்
கோணப்பாவந்தவொருகண்ணிறைலே
துலங்கவேயான்பிறந்தமூலங்கண்டேன்

களங்கமறவென்னையுநீகேட்பதென்ன
கடைதலையுமானதுவுமதுவேயாகும்
துளங்கவேநான்முன்றட்சரமேயானால்
தோன்றிநீயெதுவனாக்குமட்சரமேசொல்லும்
விளங்கவேயைம்பத்திலொன்றிலப்பா
விளங்கிநின்றவட்சரந்தானொன்றுதானே, (௰)

தானென்றவட்சரந்தானெதுதான்சொல்லாய்
தப்பிலேயாயினிமேலட்சரம்வேறுண்டோ
வேனென்றப்பரம்மமதுக்காயிரத்தெண்கலைதான்
வீடுபோலதுவுமொருவுயிருமாச்சு
நானென்றப்பரம்மத்தின்கண்ணுமானே
ஞட்டிவேன்காலதலையோடேயுள்ளந்தான்
ஊனென்றவட்சரந்தான்வேறுமென்று
லுயிரானப்பரம்மத்திலூனிப்பாரே. (௰௧)

உவலரியதுபார்க்கவென்றுற்கண்டானெங்கே
யுடம்பதனைக்கண்ணுலேபார்ப்பதுண்டோ
ஆணியதாயிருப்பிடத்தைச்சொன்னயானு
லறிந்துநானந்தவழிதிறந்துபார்ப்பேன்
தோணியதோர்காலாலேயறியவேனுந்
துலங்கிவிடுமப்பலல்லோமூலமெல்லாம்
வாணியென்றகாலாலேயறியாவிட்டால்
வல்வினைமும்மெத்தவடாதலைகாணுதே. (௰௨)

காணுதுவென்றுசொல்லியுனைத்தேவிட்டாய்
காண்பதுநானினியேதுயெதைநான்காண்பேன்
தோணுதுகபடமதாய்சொன்னயால்
துணையொருவரில்லையினிநீயுநானே
பூணுதுயிருந்துவிட்டாலறிவதென்ன
பிழைமோசஞ்செய்யேனுன்சும்மாச்சொல்லு
கோணுதுகோணமடாமூக்கோணமப்பா
கொடிதானசுழிதானேகொளுத்துப்பாரோ, (௰௩)

கொருத்துமென்றவட்சரத்தைவாயாற்சொல்லக்
கூடாதுவதுசொல்லக்கூச்சமெத்த
வருத்துமென்றவட்சரமேகொருத்தும்போது
வந்தவழிகூச்சமதுயெங்கேயெங்கே
பருத்துமென்றவட்சரத்தைச்சொன்னாயானால்
பாதியுடலுந்தனுக்குதத்தஞ்செய்வேன்
தருத்ததொருவட்சரந்தானிதுதானென்று
தனைந்ததுதானாயிரத்தெண்கலையுந்தானே. (௰௪)

தானென்றகலையதுவேயானுங்கண்டேன்
தப்பியதுவதுதனிலேயொன்றேயுண்டு
வேனென்றவட்சரத்தைக்கூடச்சேர்த்தால்
வெண்மைநிறங்காணுமதுவிளைந்துபாரு
கோனென்றவட்சரத்தையெங்கேவைத்துக்
குறிபாகவறிவதற்குமிடத்தைச்சொல்லு
நானென்றவிடுதனில்நாதவீடு
நயனத்தின்மேலானசுழினைபாரே. (௰௫)

பார்க்கவேவட்சரத்தைச்சுழினைவைத்துப்
பரிவாகக்கண்டுதங்கேப்ரம்மசோதி
யார்க்கவேயட்சரமோராருசேர்க்க
வெனதுமுகமைந்துமைந்துவருணைமாச்சு
சேர்க்கவறியாதவாலைப்பெண்ணேநீதான்
செயமானவட்சரம்நீசொன்னதல்ல
தாக்கபாப்ரம்மந்தான்யெனக்குச்சொல்லத்
தட்டுருவிப்பாய்ந்ததந்தசோதிதானே. (௰௬)

சோதியென்றவிழிதிறக்கவக்கினியுமாச்சு
சோமசூரியனக்கினியுமூன்றுமாச்சு
வீதியென்றவக்கினியின்விழியாற்றானும்
விழிக்குதங்கேபார்க்கையிலேபத்தித்தையே
ஊதியென்றபேர்களுமோவொருவரில்லை
நானொருவன்தான்தனித்தேனந்தவேளை
ஓதியென்றபெண்ணையுந்தான்நானும்பார்த்து
வூடற்பாதிகொடுக்கவுந்தான்தேடினேனே. (௰௭)

தேடினேனுதாரமொன்றுமில்லை
திரண்டுருண்டப்ராம்மத்தில்நின்றுக்கொண்டு
சாடினேன்திசைசத்திசமைத்தேனப்பா
சலனமில்லாப்பீடமதாய்போட்டேனென்றே
கூடினேன்வொருத்திதனைசிரசிற்கொண்டேன்
கூட்டோடேதானணைத்தேன்வொருத்திதன்னை
நாடினேன்வொருத்திதன்னையேவற்காக
நாயகியாள்பாதமதில்வைத்திட்டேனே. (௰௮)

வைத்திட்டேன்சத்திகளைநாலுபேர்கள்
வகையானவாதிசத்திபராசத்தியோடு
மொய்த்திட்டஞானசத்திவாலைசத்தி
முதலானநால்வருக்கும்பங்காய்நின்று
இத்திட்டமுகம்நாலுமவரவர்க்குச்
சமபாகஞ்சேர்ந்துநானங்கேநின்றேன்
ஒத்திட்டேனொருமுகமும்ப்ரம்மத்தோடே
யுருவாகப்ப்ரம்மமுகமானேன்பாரே. (௰௯)

பார்க்குமென்றபீடசத்திரூபந்தானும்
பரிவானகலையிருநூற்றிருபத்திநாலாம்
ஏர்க்குமென்றசத்திதான்பிரிதிவியுமாறு
னென்னசொல்வேனவளுடையவுடல்வளப்பம்
மார்க்கமென்றவப்புவனந்தமாச்சு
மைந்தனேதேயுவென்றபிந்துமாச்சு
தீர்க்கமென்றபுல்பூடுவிருட்சமெல்லாந்
திறமானரோமமதுவாய்வுமாச்சே. (௨௰)

ஆச்சுதென்றேயவளுடனுன்கலந்தாலே
யாகாசமுதலாகவஞ்சுமாச்சு
வாச்சுதென்றபொன்மேரு * ரசிதமேரு
வல்லவையாள்தனையிரண்டுமாகுமாகும்
நீச்சுதென்றேயாணுமேசேர்ந்தபாகம்
திருவாணிவெள்ளியிடமெருமாச்சு

* ரசிதமேருவென்பது-வெள்ளிமலையெனக்கொள்க.

காச்சுதென்றசத்திகிரிசிவகிரியுமாகுங்
கைலாசகொடிமுடியுமிதுதான்காணே. (உக)

காணவேரத்தினமாபரணமாச்சு
கனமானமேகமதுவஸ்திரமாச்சு
பூணவேஜெகச்சோதிசொல்லப்போகாப்
பூரணமாய்விளைந்ததெல்லாமவளுக்குள்ளே
ஆணவேயாதிசத்தியாதிவஸ்து
வவளல்லாலதிகாரமார்க்குமில்லை
தோணவேயானுமிவள்மூலந்தன்னை
அலங்கவேகண்டதில்லையென்றாற்றுனே. (உஉ)

தானென்றலட்சுமியுமிவள்தானாகுந்
தாங்கியதொரட்சரமும்-அவ்வும்-உவ்வும்
வேனென்றபிராணசத்திபிரியாசத்தி
வேதாந்தசத்தியொடுமூன்றுமாச்சு
நானென்றமேருவதிலிருந்துக்கொண்டு
நாட்டினேனனேகவிதசிருஷ்ட்டிப்பாகத்
தேனென்றப்ரம்மத்தாச்சரியம்பார்த்து
தேவியைப்போற்கலைபிரிந்துசிருஷ்டித்தேனே. (உ௩)

---

## சிருஷ்டிக்குரியலோகங்களுங்-கலைகளுங்-கூறல்.

தேனானகைலைக்குத்திசையெட்டாகுந்
திக்கெட்டுபாலகர்க்குங்கலையெட்டாகும்
வானனவயிரவருமிவர்தானாகும்
வல்லதொருவஷ்டசித்தர்கார்த்திருப்பார்
தானனகைலைமலையதனைச்சுத்தித்
தான்வசிக்குங்கிரியெட்டும்வானமூட்ட
பானனவாயிரத்தெண்கோடிகாதம்
பாப்பாகநிற்குமிந்தவீதிதானே. (உ௪)

வீதியும்நால்வீதியுமிப்படியேயாக
விளங்குசப்தலோகமுமேயிதின்மேலாகும்

ஆதியாமேமேலோகமேழுக்குந்தா
னறிதானபூலோகம்வாய்வுலோகம்
சாதியாம்வருணனுடலோகமொன்று
சாற்றுகிறேன்கதிர்மதியின்லோகமொன்று
நீதியாம்நட்சத்ரலோகமொன்று
நிகழ்த்துகிறேன்சத்தியலோகம்மேலாமே. (௨௫)

ஆமென்றலோகமதுமேலதாகு
மதிலிருந்துகீழேழுலோகமாகும்
ஓமென்றப்ரம்மகலையாயிரத்தெட்டு
வொடுக்கியேயீரேழும்நிறைந்தேயிற்கும்
வாமென்றநந்திபதினெட்டுபேர்க்கும்
நலமானகலைகள்பதினெட்டாயிற்கும்
வாமென்றதுவாரபாலரெட்டுபேர்க்கும்
வகையானகலையதுதானெட்டுமாச்சே. (௨௬)

ஆச்சப்பாயிந்திரர்க்குகலையீரேழு
வழகானப்ரம்மகலையெட்டொன்றாகும்
வாச்சப்பாவிஷ்ணுவுக்குகலையீராறு
வளமானருத்ரர்கலைபதினைந்தாகும்
மூச்சப்பாமுப்பத்துமூன்றுகோடி
முறையானதேவர்கலைமூன்றாகும்
பேச்சப்பாநாற்பத்தெண்ணாயிரந்தான்
போனரிஷிகளுக்குநாற்பத்தெட்டே. (௨௭)

எட்டானஅஷ்டதிக்குகலைதானெட்டா
மியலானசப்தகன்னிகலைதானேழாம்
அட்டானலட்சுமியாள்யெட்டுபேர்க்கு
மழகானகலையதுவேபன்னிரண்டாகுந்
இட்டானநவக்கிரகம்வொன்பதுக்குந்
துடியானகலையிருபத்தேழுமாகும்
வட்டானகதிரவர்க்குப்பதினாறாகும்
வளர்மதிக்குபதினைந்துகலையுமாமே. (௨௮)

ஆகுமேபிரமனென்னவாகனத்திற்கு
வழகானகலைமூன்றுமாகுமாகும்

ஆகுமேமாலேறுங்கருடனுக்கு
வழகானகலையஞ்சுமாகிநிற்கும்
ஏகுமேருத்திரனேறும்ரிஷபத்திற்கு
வியல்பானகலையெட்டாய்ச்சேர்ந்துநிற்கும்
தாகுமேயிந்திரனேறும்யானைக்குத்தான்
தப்பாதுகலையேழுதானுமாமே- (௨௯)

ஆமேநமன்கலைநாத்தித்தொண்ணூத்திரண்டு
வழகுசத்திமூவருக்குநாற்பத்தெட்டாம்
நாமேபூதலங்களுக்குபதிமூன்றாகும்
ராட்சதர்க்குகலைபத்துநாலமாய்நிற்கும்
வாமேவுமநிதருக்குபன்னிரண்டாகும்
மரவிதனக்கலையதுதான்றொண்டேயாகும்
பூமேவுபரவைவிலங்கின்நீர்வாழும்
புகழானவுயிர்களுக்குகலையேழாமே. (௩௰)

ஏழுடனேதத்துவன்னூர்வுயிருக்கெல்லா
மேறும்புகடைமுதல்கலைமூன்றனாதாநிற்கும்
வாளுடனேயாயிரத்தெண்கலையுமாச்சு
வல்லதொருகலையாலேதிஷ்டித்தேனன்
நாளுடனேவுரைத்திட்டேன்வடுகனுக்கு
நன்றாகவோராயிரத்துயெட்டுமாச்சு
நாளுடனேகைலைக்குமேற்கதாக
நலமானதேசமதுவன்பத்தாரோ. (௩௧)

ஆறானயிதிலிருக்குமானிடர்க்கு
மைன்னூறுவயதுடனேமுழம்நானூறும்
பேறானவடதிசையிலிதனில்லொட்டி
பிசகாதகிழ்த்திசையில்முழம்நாலுபத்து
கூறானவயதுமதுமுன்னூறாகும்
குழியானதென்றிசையோர்முழமோநாலு
தேறானவயசுநூற்றிருபதாகத்
திசைநாலுமிப்படியேதிஷ்டித்தேனே. (௩௨)

கொள்ளென்றேன் தேவரெல்லாமொவ்வொன்றாகக்
குவலயத்திலவதாரஞ்செய்துக்கொண்டார்
விள்ளென்றேனகஸ்தியரையாக்கர்கூடி
வேதனைகள்செய்தார்களொருவனென்று
வள்ளென்றேயெந்தனையுமனதிலுன்னி
மாய்கையாய்தியானமதுசெய்துக்கொண்டான்
தெள்ளென்றேநந்தியைத்தானும்பார்த்து
திறமானவிடுக்கமதுதீரொன்றேனே. (௪௧)

தீரொன்றேனந்தியுந்தானென்னைப்பார்த்து
தீர்ந்துநான்வருகவோயிருக்கவோவென்றான்
காவொன்றேனகஸ்தியனந்துள்ளமட்டும்
கலிமுடித்துநீயுந்தான்வரலாமென்றேன்
தாவென்றவம்பரத்தான்மூலைகேட்டான்
தவஞ்செய்தாலப்பாமேதருவேனென்றேன்
வீறென்றேனந்தியுந்தான்சுடர்வாட்கொண்டு
வேகமதாய்வந்துவினைதீர்த்திட்டானே. (௪௨)

தீர்த்துவிட்டநந்திக்குப்ரம்மபட்டந்
தீரமதாய்யீந்துவிட்டேன்சிலநாளாண்டான்
காத்துவிட்டபிரமனுக்குவிஷ்ணுபட்டங்
கருணைபெறவேயீந்தேன்வெகுநாளப்பா
பார்த்துவிட்டபாப்ரம்மரிஷிவாமேகேட்டான்
பரிவாகவீந்துவிட்டேன்பற்றற்றோனே
தேர்த்துவிட்டரிஷியென்றன்றலையிற்கையைத்
திறமாகவைக்கவென்றானுதித்திட்டேனே. (௪௩)

உதித்திட்டேனீஸ்வரியாளென்னைத்தேடி
யுறவானவிஷ்ணுவையும்போகச்சொன்னாள்
அளித்திட்டயீஸ்வரியைப்பார்த்துமாலு
மவர்பயந்துபோனார்யான்போகேனென்றார்
களித்திட்டதன்மூலரூபதேசித்துக்
கன்னிகைபோலாவாய்நீபோய்வாவென்றேன்
செளித்திட்டமாலுமந்தவடிவேகொண்டு
சிறப்பாகவென்னைத்தேடிவந்தாள்காணே. (௪௪)

காணவேகன்னியைப்போல்வருகும்போது
    காதலுடன்ரிஷிகண்டுமோகமுற்றான்
பூணவேசுகியில்லையென்றுசொல்லிப்
    புகழ்நிரோகசுத்திசெய்துவாநீயென்றான்
தோணவேதலைமுழுகித்தலைதுவட்ட
    தொட்டதலைதீப்பிடித்துவெந்ததையோ
காணவேகன்னிகைமால்வடிவமாகி
    கம்மையுமேதாமழைத்தாள்நாம்வந்தோமே. (சரு)

வந்துவிட்டதிருமாலைத்தானும்பார்த்து
    வரம்பெற்றபிரமரிஷியெங்கேயென்றேன்
வெந்துவிட்டான்ரிஷியவனுமென்றுசொல்ல
    வெருகெட்டிக்காரனென்றுமெச்சினேன்யான்
தந்துவிட்டாரிஷிதானுஞ்சாம்பலாகித்
    தழும்பாயவ்வுயிர்வந்துதரையில்வீழ்க
அந்துவிட்டகையனொன்றுகேட்க
    வறியோம்நாம்பரப்ரம்மரிஷியென்றானே. (சசு)

என்றவுடன்ரிஷியுந்தானென்னைப்பார்த்து
    யென்றாலமுநிந்துநானேபுத்திகெட்டு
அந்தவரமெந்தனுக்குவேண்டாமையா
    வழியாதவரம்வேண்டுமென்றுகேட்டான்
நின்றவாமுந்தனுக்குக்கொடுக்கவென்றால்
    நிலையாதநரலோகஞ்செல்வாயென்றேன்
வென்றவரம்வேண்டுமென்றதகப்போய்தாமோன்
    விதமானசாத்தாவாய்செல்லென்றேனே. (சஎ)

செல்லென்றேனாலோகம்ரிஷிபோய்ச்சேர்ந்தான்
    செயமானமாலையுந்தானழைத்துக்கேட்டேன்
வெல்லென்றயீஸ்வரியாளென்னைப்பார்த்து
    விதமாகவவள்மூலமெனக்குச்சொன்னாள்
கல்லென்றகன்னிகையாயாளுந்தோன்றி
    கலம்பெறவேயவன்கைகொண்டெரித்தேயென்றான்
மல்லென்றமாலவனையானும்பார்த்து
    மகத்தானமூலமொன்றேயிந்திட்டேனே. (சஅ)

சந்திட்டேனிலக்குமியான்சேர்ந்ததாலே
யிதமானசித்தியதின்மூலம்பார்த்து
பாய்ந்திட்டருத்திரனார்பட்டமீந்து
பரமானவட்சரமுந்தருவேனென்றேன்
ஆய்ந்திட்டதிருமூலருத்திரனைத்தானு
மழகானதெக்கணத்திற்செல்வாயென்றேன்
வாய்ந்திட்டதிருமூலரென்னைப்பார்த்து
வளமானவம்பரமெங்கேயென்றானே. (௪௯)

எங்கேயென்றான்தெக்கணத்திற்றருவேனென்றேன்
யெனக்கேவற்பிள்ளையொன்றுவேண்டுமென்றான்
அங்கிருந்தோர்நந்திவந்துசபிப்பானென்றே
யாச்சரியமெல்லாந்தான்கேட்டுக்கொண்டான்
நங்கென்றகைலைமுதலண்டகூடம்
நலமானமூலமுதலாராதாரம்
வங்கென்றபரப்ரம்மவாலறெல்லாம்
வல்லபிள்ளையென்றுசொல்லியுரைத்திட்டேனே. (௫௰)

உரைத்திட்டேனிதுவெல்லாமுள்ளத்துள்ளே
வொளியாகவுனக்குள்ளேகாணவென்றால்
திரைத்திட்டேனண்டத்திலுள்ளதெல்லாந்
திறமாகபிண்டத்திற்காண்பாயென்றேன்
வரைத்திட்டமாகபதினேழுபேர்கள்
வந்துதிப்பார்நந்திகளுநரலோகத்தில்
கரைத்திட்டதிட்சைமுதலாராதாரங்
கண்டுகொண்டவர்களுக்குச்செப்பென்றானே. (௫௧)

செப்பென்றவுத்தாரம்யானுங்கேட்டுச்
சிரசுதட்டபாதமதில்நமஸ்கரித்து
ஒப்பென்றதிரிசூலமழுவும்வாங்கி
யுயர்விடையின்மீதேறித்தேவர்சூழ
வெப்பென்றகைலாசந்தன்னைவிட்டு
விதமானதில்லைவனந்தன்னிற்சேர்ந்தேன்
நப்பென்றநரலோகம்பார்க்கும்போது
நரரெல்லாமிராக்கதராய்நான்கண்டேனே. (௫௨)

கண்டவுடன்ராக்ஷசசம்மாரஞ்செய்து
கருப்பிடித்துவனேகவிதமாம்பெண்ணைக
மண்டலத்தில்திருஷ்டித்தேனவளையெல்லாம்
மகத்தானமலைகளெல்லாமிருக்கக்கண்டேன்
விண்டதொருமலைகளெல்லாம்வேதமூன்றி
விதமானசிரகிந்துசபித்துப்போட்டேன்
கொண்டதொருதில்லைவனம்வெளியதாக்கி
குடியிருந்தபதஞ்சலிக்குவருட்சொன்னேனே. (௫௧)

சொல்லிவிட்டேன்வியாக்கிரமபாதனுக்கு
செயமானவருள்காணவுபதேசித்தேன்
எய்துவிட்டேனவருமொருபிள்ளைக்குத்தா
னிதமானதீக்ஷையதுசெய்துவைத்தேன்
உய்துவிட்டுவங்கிருந்துதவமேசெய்து
வுயரீசன்சொற்படியேவரமும்பெற்றேன்
கொய்துவிட்டேனியானிருந்தகோலமெல்லாங்
கூடினேனம்பரத்திலாடினேனே. (௫௨)

ஆடினேன்காலரிந்தானேந்தன்மைந்த
ஞதிகாலாங்கியென்றுபேருமீந்தேன்
சாடினேனங்கிருந்துபொதிகைதன்னிற்
சந்தோஷித்தகஸ்தியனுமழைத்துக்கொண்டான்
கூடினேன்மயூரத்தின்விபரங்கேட்டார்
குருந்தமரத்தடியிருப்பேன்பின்வாவென்றேன்
தேடியென்னையகஸ்தியனும்வந்துகண்டு
தெரிசித்துப்பூசித்தம்பரங்கேட்டானே. (௫௩)

கேட்டவுடனங்கிருந்துசேவைதந்தேன்
கெடியானசிவவடிவமாக்கிக்கொண்டேன்
ஆட்டமுடனகஸ்தியனுங்காணவென்று
வாடினேன்சித்தம்பலந்தன்னில்நின்று
நாட்டமுடன்காலாங்கிப்பிள்ளைவந்தான்
நலம்பெறவேநிருவிகற்பசமாதிகேட்டான்
தேட்டமுடனவன்றனக்குச்சமாதிசொன்னேன்
தென்னிலங்கைதனிலிருந்துதேறினேனே. (௫௪)

தேறியேயெழுந்துவந்துபணிந்துநின்றான்
    திரிகூடத்திசான்யசாட்டிற்சென்றோம்
மாறியேயவர்க்குமொருசமாதிசொன்னேன்
    மலைதனக்குவாயுவிலேசமாதிநின்றான்
கூறியேயானுமதின்கிழக்காய்வந்து
    குருமூலங்காலாங்கிக்குபதேசித்தேன்
மாறியேயிங்கிருநீயென்றுசொல்லி
    மலையாளதேசமிசையான்சென்றேனே (௫௭)

சென்றிட்டேன்சேரமானெனையுங்கண்டு
    தெரிசித்தேயெந்தனையுமோக்ஷங்கேட்டான்
வென்றிட்டதலமாகயானும்நின்று
    விதமாகவவன்றனக்குமோக்ஷமீந்து
குன்றிட்டகொல்லிமலைச்சாரில்வந்து
    காலாங்கிபிள்ளையையுமழைத்துக்கொண்டு
நன்றிட்டசதுரகிரிமலையிற்சென்றே
    நல்லதொருபிள்ளைக்குபதேசித்தேனே. (௫௮)

தேனென்றசித்திரகூடத்திற்சென்று
    திறமானபிள்ளையொன்றையானுமாக
நானென்றகாலாங்கிபிள்ளைக்குத்தான்
    நலமானப்ரம்மபட்டங்கிடைக்குமென்று
தானென்றகைலாசந்தன்னிற்சென்றே
    கமலனதுபட்டமதையீசனீந்தான்
தானென்றபிள்ளைக்குகர்ப்பமீந்து
    தவஞ்செய்வாய்சதுரகிரிதனிலென்றேனே. (௫௯)

என்றுநானங்கிருந்துவயிரகிரியிற்சென்றே
    யிதமானபிள்ளையொன்றுக்குபதேசித்தேன்
அன்றுநானுபதேசஞ்செய்தபிள்ளை
    யழகானப்ரம்மபட்டந்தன்னையாண்டு
வென்றுமவனம்மிடத்தில்வந்துசேர்ந்து
    விதமானவிஷ்ணுபட்டந்தனையுங்கேட்டான்
நன்றுடனேவீசனையும்பூசித்தாக்கால்
    நலமானவப்பட்டம்வருமென்றேனே. (௬௰)

இஷ்டமுடன்மாயவனார்கைலைசென்று
    யீசனாருவிருதாளைப்பூசைசெய்ய
சட்டமாய்விஷ்ணுபட்டந்தன்னையீந்தார்
    சமர்த்தானகாலாங்கிப்பின்னைக்குத்தான்
திட்டமாய்சதுரகிரிப்பின்னைவந்து
    திடசித்திபண்ணிவந்தான்சட்டைதள்ளி
அட்டமாசித்தியெல்லாமவனுக்கீந்து
    வதிகாரம்பட்டமாமென்றேனே (கூக)

ஆமென்றப்ரம்மபட்டமீசனுமேயீந்தா
    ரதிலிருந்தான்சட்டையப்பலனேகளாய்
ஊமென்றவயிரகிரிப்பின்னையையுங்கூட்டி
    புறவானநீலகிரிவந்துசேர்ந்தேன்
வாவென்றவிஷ்ணுவுந்தானங்கேவந்து
    வந்தனைகள்செய்துருத்ரபட்டங்கேட்டான்
நாமென்றதில்லைவனந்தன்னில்வந்தால்
    நலமானருத்ரபட்டமாமென்றேனே. (கூஉ)

என்றதொருமூலமெல்லாமியானுஞ்சொன்னே
    னிதமானருத்ரபட்டமீசனீந்தான்
அன்றதொருப்ரம்மாவும்விஷ்ணுவாக்கு
    வாச்சரியம்வயிரகிரிப்பின்னைக்குத்தான்
நன்றதொருப்ரம்மபட்டந்தன்னையீந்தார்
    நலமானபின்னைமொண்டுக்குபதேசித்தேன்
வென்றதொருருத்திரனென்னிடத்தில்வந்தே
    விதமானவெம்பாத்தில்விதிகேட்டானே. (கூ௩)

விதிகேட்டான்காலாங்கியென்னைப்பார்த்து
    விதமானவெள்ளிமலைதனில்போவென்றேன்
நதிமூலமென்னிடத்தில்வந்துகேட்டான்
    நான்கொடுத்தேன்கமண்டலமுந்தெண்டிகையில்
பதிகேட்டகாலாங்கிவந்தனைகள்செய்து
    பதிவானபின்னையொன்றுவேண்டுமென்றான்

துதிகொண்டபிள்ளைகளைப்பார்த்துநீயுந்
துணையாகவழைத்தவட ஞ்செல்லென்றேனே. (கூச)

செல்லென்றவுத்தரம்யானுங்கேட்டுச்
சிவவேடமானதெல்லாந்தரித்துக்கொண்டு
வல்லென்றகமண்டலமுந்தண்டுங்கொண்டு
வடமேலாய்ச்சென்றிட்டேன்மலையைப்பார்த்து
நல்லென்றபுவனகிரிபட்டணமேசேர்ந்து
நலமானபிள்ளையொன்றைத்தேடிப்பார்த்து
வெல்லென்றபிள்ளையொன்றுகாணுமற்றான்
விதமானகுருவருளைநினைந்திட்டேனே. (கூரு)

நினைத்திட்டேன்மூலகுருநாதன்பார்த்து
நிசமானபிள்ளையிருப்பிடமேசொன்றூர்
அணைந்திட்டேனதுவிருக்குமிடமேசென்றே
னஞ்சாறுபிள்ளையொருவீட்டிற்கண்டேன்
கனிந்திட்டப்பிள்ளைகளிலொன்றைப்பார்த்துக்
காடுமட்டுமழைத்துப்போய்வருவேனென்றேன்
பிறந்திட்டபேச்சையவன்றாயுங்கேட்டுப்
பொல்லாதசன்யாசிபோவென்றாளே. (கூசா)

போமென்றபிள்ளையதின்றாயைப்பார்த்து
புசிப்புக்குமனமூழன்றுதவிக்கின்றாயே
ஆமென்றபிள்ளைகளஞ்சாறுதன்னி
லாகுமென்றபிள்ளைகளைவைத்துக்கொண்டு
ஓமென்றபிள்ளையதாயொன்றுதந்தால்
வுன்பசியைத்தணிப்பனென்றுவுறுதிசொன்னேன்
வாமென்றபிள்ளைகளையென்மூன்விட்டு
வாகானபிள்ளைதனைக்கேளென்றாளே. (கூஎ)

கேளென்றாள்கிழிக்கட்டிநாறுபொன்னைக்
கெடியாகவவடனக்குக்கொடுத்துப்போட்டு
ஆளென்றபிள்ளையொன்றையழைத்துக்கொண்டு
யழகானகைலைகிரிமலையிற்சென்றேன்
வாளென்றமனிதருக்குஞானமில்லாதாலே
வலுவானபிள்ளைகளுங்கிடைக்கவில்லை

தேனென்றவிஷமானவாசைதன்னிச்
சிலதுவுபதேசமதுசெப்பினேனே. (௬௮)

செப்பினேன்கற்பமூநற்றீட்சையெல்லாஞ்
செகசாலவித்தையெல்லாமறியச்சொன்னேன்
தப்பினேனென்றுசொல்விகர்ப்பங்கொண்டு
தலைகாலுந்தான்தானேகண்டுக்கொண்டேன்
ஒப்பில்லாமூலர்தெரிசனமேகேட்டான்
வுலகத்திற்றில்லைவனஞ்செல்லாயென்றேன்
மெப்பினேனென்றவனும்வணக்கஞ்செய்து
வேதாந்தத்திறவுகோற்கைக்கொண்டானே. (௬௯)

கைகொடுத்தகுருவையுந்தான்வணங்கியானுங்
காலதிந்துமூலனாயுங்கண்டுக்கொண்டு
கைகொடுத்தபிள்ளைகளையானும்பார்த்துச்
சந்தோஷமாகவேதழுவிக்கொண்டு
ஐகொடுத்தவனுமுகத்தாற்சந்தோஷித்து
வாச்சரியமானபொன்னம்பலவாயென்று
உய்கொடுத்தவீசனிடஞ்செல்வாயென்று
வுறுதியாய்க்கவனமதுகொடுத்தார்தானே. (௭௰)

தானென்றகவனத்தாற்சென்றேனியானுந்
தப்பாமலாயிரத்தெண்போசனையதாக
மூனென்றமூச்சியிலப்படியேசென்று
முடியானகைலாசமுடியிற்சென்றேன்
வானென்றகைலைசத்திமலைவாய்வந்து
வல்லசிவன்சத்திபதம்வணங்கினேன்
ஏனென்றநீயார்காணென்றுகேட்க
வெந்தனதுமூலர்திருப்பேர்சொன்னேனே. (௭௧)

சொன்னதொருமொழிகேட்டுவீசன்றானுஞ்
சுந்தரியைப்பார்த்துயிவன்சகத்தானென்றார்
அன்னையுந்தானனையழைத்துமுத்தமிட்டு
வதிகாரப்ரம்மபட்டமருளிச்செய்தான்
முன்னையுந்தானிருந்தவொருப்ரம்மாவைத்தான்
முடிவானவாடபுரமேபோநீயென்றான்

நன்னயமாய்ப்ரம்மனென்றபேரும்வாங்கி
நற்பிரம்புதான்வாங்கிநடந்திட்டேனே. (எஉ)

நடந்திட்டேன்பிரமனுடலோகஞ்சென்று
நலமானவாசனத்திலேறிக்கொண்டேன்
கடந்திட்டபேர்போலமனிதரெல்லாங்
காடுபோலிருந்தார்களறிவேயில்லை
தொடர்ந்திட்டமோகமுங்கலியாணமில்லை
தொடரானபிறப்பிறொடுபிறப்புமில்லை
உடந்திட்டமனிதரெல்லாமுறவுசேர்ந்து
வொருவர்போலொருவர்தனைத்தொடர்செய்தேனே. ()

செய்திட்டேனுத்தாருமுத்தமிட்டுச்
செயமானமுகத்தாலேபார்த்துப்பார்த்துக்
கைதிட்டகருமமதுமொன்றுக்கொன்று
காதல்கொண்டுவவனவனைச்சாகச்செய்தேன்
கொய்திட்டேன்முன்னுள்ளபிராணியெல்லாங்
கொடியானயெமனையுந்தான்றிருஷ்டித்தேனியான்
மெய்திட்டகாலாங்கியருளினாலே
மெய்க்காலனுதனையும்விதித்திட்டேனே. (எச)

விதித்திட்டசேதிருத்தாளிந்துக்கொண்டு
விதமானராக்ஷதனையனுப்பிவைத்து
மதித்திட்டகதிரவனைமறைக்கச்சொல்லி
மாய்கையாயிருண்டோடச்செய்துவைத்தார்
எதிர்த்திட்டுசுடர்வாளைக்கையிற்கொண்டு
யேகாந்தககாடாகவுமுத்துவிட்டேன்
சதித்திட்டராக்ஷதனைச்செயித்தபின்பு
சந்தோஷமாய்க்கதிரோன்தான்வந்தானே. (எரு)

வந்ததொருருக்ரனவன்றனுங்கண்டு
மாற்றிவைத்ததாரென்றுமனதிலெண்ணி
என்னுடசேனைதனைச்செயித்தவனொன்றே
யெழின்விடையின்மீதேறியிங்கேவந்தான்
கந்தமலைவரங்கேகீயானொன்றுங்
குடாதவிவ்வேலைசெய்தாரெனவந்தாவென்றும்

அன்றதொருபுவனமெல்லாஞ்சோதியாச்சு
வறுபதுநாழிகைக்கதிரோன்விசாலமாச்சு
சென்றதொருகதிரவர்க்குப்பாதிபொழுதாக்கிச்
சமபாதியிருட்டாக்கிச்சொல்லைக்கேளு
வென்றதொருமனிதருக்குவுறக்கம்வைத்து
விதமானமூச்சுகளைசங்கரித்திடாயே. (௮௰)

சங்கமென்றவாயுஞமேகுணாந்துபோகுஞ்
சண்டனுக்குவுத்தாரஞ்செய்துபோடு
கந்துலென்றவிருளதுவேமூடுமானாற்
கருதுமெனக்கூர்வெளிச்சம்வேணுமென்றார்
பொங்கமென்றசந்திரனைப்பிடித்தேவீசன்
பெருதிருளைவிலக்குமெனக்கையிலீந்து
பங்கமதாகதிரவர்க்குப்பாதியென்று
பாஞ்சோதிருத்திரர்க்குப்பகர்ந்திட்டாரே (௮௧)

பறைந்திட்டவீசனையுமுருத்திரனார்பார்த்துப்
பதினைந்தோடணைக்கலையீந்தீரோவென்றார்
அறைந்திட்டோமப்படியேதந்தீரென்று
ராத்தானுமதுகொடுக்கலாகாதென்றாள்
நிறைந்திட்டசந்த்ரனும்பூரணமதாக
சித்தமிருக்காதுமதிக்கோர்நாளென்றார்
குறைந்திட்டநாள்போகக்குறையாநாளிற்
காரணமதாகவொன்றுசொல்லுவேனே- (௮௨)

சொல்லுவேனென்றமொழியாத்தாள்கேட்டு
சுருக்கானகாரணந்தானேதோவென்றாள்
வெல்லுமென்றநந்திகளுந்தேவரெல்லாம்
விதமாறியவதாரஞ்செய்யுமென்றோம்
நல்லுமென்றநந்திகட்குப்பூரணத்துநாளில்
நலமானதெரிசனம்நீகொடுப்பாயென்றார்
செல்லுமென்றவுத்தாரங்கேட்டுக்கொண்டு
சிந்திப்போர்க்கிதனைச்செப்புவனென்றானே. (௮௩)

என்றமொழியுருத்திரனுங்கேட்டுக்கொண்டு
யிருவரையும்வந்தனைகள்செய்துபின்னர்
வென்றவழிசந்திரனைக்கையிற்கொண்டு
வேகமதாய்ப்பூலோகம்வந்துபார்த்து
நன்றெனவேபூமியுநான்முகனுக்காச்சு
நலமானவிஷ்ணுவுக்குவதன்மேலாச்சு
கன்றெனவேதானிருக்கும்படியின்மேலே
கதிரவனுருலகமெல்லாம்வைத்திட்டாரே. (அச)

இட்டமாவெந்தனதுவேலைக்குத்தான்
இறமானபிரமனென்றுநியமஞ்செய்தார்
கஷ்டமாய்ச்செய்தோமேமுன்னமென்று
கருமமதுவிலகுதற்குப்பூசைசெய்தேன்
சட்டமாய்சாதிப்பூசகஸ்திரங்கொண்டு
தற்காலர்பூசைசெய்துபுரியுங்காலம்
இஷ்டமாய்ப்பூசைசெய்தாவென்றுசொல்லி
யிசனுமேசங்குசக்ரமெனக்கீந்தாரே. (அரு)

நடேனசன்சக்கரந்தைவிழுங்கியது-கூறல்.

ஈந்ததனையிருகரத்தால்வாங்கிக்கொண்டு
யிருகாளிற்சிரம்பொருந்தப்பணிந்துநின்றேன்
ஆய்ந்ததொருவீசனுந்தானெனையும்பார்த்து
வருட்சூர்ந்துவிஷ்ணுவென்றபட்டமீந்தார்
வாய்ந்தவெவ்வாயறக்கடந்துவருகும்போது
வல்லகணபதியும்வழிமறித்துக்கேட்டார்
வேய்ந்தமதிவீசனையும்பூசைசெய்தேன்
வென்றிசங்குசக்கரமுமீந்தார்காணே. (அசு)

காணுமென்றசக்கரத்தைக்கண்டபோதே
கையில்தந்தால்பார்த்ததனைத்தருவேனென்றார்
வேணுமென்றுற்பாருமென்றுகரத்திலீந்தேன்
வெகுசுருக்காய்வாய்தனிலேபோட்டுக்கொண்டார்

ஊனுமென்றசக்கரத்தைத்தாருமென்ற
வுடன்மூக்கைப்பிடித்திழுத்துத்தருகேனென்றார்
நானுமென்றகணபதியைவிட்டுநான்போய்
நாமமதுதுவாதசமுந்தான்பூண்டேனே. (௮௭)

பூண்டபின்புகையிலொருதப்புக்கொண்டு
புகழானசேகண்டியெடுத்துக்கொண்டு
ஆண்டதொருசல்லடமுங்கச்சைகட்டி
யழகானதண்டையொடுசிலம்பும்பூண்டு
நீண்டதொருமஞ்சள்முடிக்கயறும்பூண்டு
நெடிதானகுல்லாவுஞ்சிரத்தில்வைத்து
வேண்டதொருநெய்ப்பந்தங்கையிற்கொண்டு
விநாயகன்முன்னின்றொருகூத்தாடினேனே. (௮௮)

ஆடினேனவயவங்களெல்லாங்கண்டு
வானந்தக்கூத்தாடித்தாதாவென்றேன்,
சாடினதோரென்கூத்தையவரும்பார்த்து
தான்சிரித்தார்சக்கரத்தைமறந்துவிட்டு
நாடினதோர்சக்கரத்தையெடுத்துக்கொண்டு
நானோடிவந்துவிட்டேன்மலையின்மீது
தேடிவந்ததேவரெல்லாமென்னைக்கண்டு
திருக்கூத்தைக்காட்டுமென்றுசெப்பினாரே. (௮௯)

செப்பினாப்படியேயாடிக்காட்டச்
செகத்திலுள்ளமானிடருந்திரண்டேகண்டார்
ஒப்பினார்தேவர்கடாமென்னைப்பார்த்து
வுயர்தலந்தான்திருப்பதியென்றறிந்துக்கொண்டார்
அப்பினாகஸ்தியனாயிரம்பேர்க்
கருட்பெறவேயுபதேசஞ்செய்துவைத்தார்
மெப்பினார்நந்திகடாமேழுபேர்கள்
மிச்சமுள்ளோரகஸ்தியர்பாற்சென்றிட்டாரே. (௯௰)



## திருப்பதியுற்பவங்கூறல்.

சென்றிட்டநந்திகளிற்புலத்தியனென்றுஞ்
செயமானகாசிபர்மார்க்கண்டனோடும்
அன்றிட்டவஷ்டாங்கரிஷிதானென்று
வழுகானகௌதமருங்கலைக்கோட்டானும்
வென்றிட்டசதானந்தரிஷியுங்கூட
விதமானவெழுவருமந்திகளேயானார்
நன்றிட்டவகஸ்தியரோடெட்டுபேரும்
நல்மான் கைலாசவர்க்கந்தானே. (கக)

தானென்றபொதிகையதிலிவர்கள்கூட்டந்
தானிருக்குமலையதுதானதிகமாகும்
நானென்றமலையதுவேசதுரகிரிதான்
நான்திருக்கூந்தாடினதால்திருப்பதியென்றுச்ச
வானென்றவெண்சதுரகிரியிலப்பா
வாழுகின்றதேவர்களோவொருநூத்தெட்டு
வேனென்றவெண்சதுரகிரிதானாகும்
விளங்குகின்றவேங்கடாசலபதியுமாமே. (கஉ)

ஆமென்றவகஸ்தியருங்குளிகைசெய்தா
ரழகானகுதிரைக்குஜீனிசெய்தேன்
வாமென்றவகஸ்தியர்தானென்னைப்பார்த்து
வளர்ஜீனிவர்க்கமென்றேபெயருமீந்தார்
வேமென்றகுதிரையின்மீதேறிப்பார்த்து
வீதிசுத்திவருகிறேனென்றுகேட்டேன்
போமென்றுவகஸ்தியர்தாமனுப்பிவிட்டார்
போனேனென்மூச்சுக்கதுபதுகாதமாமே. (கங)

காதமென்றகுதிரைசுருக்கிலேயேயென்று
கடுங்காரமேற்றியதாற்சேணம்வைத்தேன்
வேதனவனெனைக்கண்டுகுதிரைகேட்டான்
விதமானகுதிரைதனையவனுக்கீந்தேன்

நாதன்வளர்கைலாசமதனிற்சென்று
சல்லாவின்மாநிழலிலிருந்துக்கொண்டேன்
மாதவர்களொடுவயன்மாற்றேவரெல்லாம்
மனதினகிமகிழ்வோடுமிருந்திட்டாரே. (கசா)

மகிழ்ந்திட்டாரீசனுமேயதனைக்கண்டு
மகத்துவங்களதிகமதாயாச்சுதென்று
புகழ்ந்திட்டார்துவாரபாலாளோடு
புகழானந்தியையுமழைத்துச்சொன்னார்
இகழ்ந்திட்டாரிவராலேயாவதென்ன
யென்றுசொல்லியிருந்தார்கள்மகத்துவமேயென்றார்
உகந்திட்டராகூதராய்சென்னனஞ்செய்ய
வுத்தாரனுஞ்செய்துவிட்டாரீசன்றானே. (கரு)

சுப்பிரமணியர்உற்பவங்கூறல்.

ஈசனதுவுத்தாரமவர்கள்கேட்டு
யிதமானராகூதராய்பிறந்திட்டார்கள்
நேசமுடனீசனைத்தானும்பார்த்து
நிருமணியகாரனென்றுயிருக்கச்சொன்னார்
ஆசனமுதலாராதாரமாறை
யறிவாலேமணியாறுய்த்திரட்டிக்கொண்டேன்
வாசமுள்ளவீசனுந்தானென்னைப்பார்த்து
வல்லசுப்பிரமணியனென்னும்பெயர்சொன்னாரே (கசு)

சொன்னபடிராகூதரும்தவமேசெய்து
சோர்வில்லாவரங்களெல்லாம்பெற்றுக்கொண்டு
அன்னபடிகைலைதனிலுள்ளபேரை
யயன்புனிதமால்தேவர்ரிஷியையெல்லாம்
வின்னமுசன்சிறைச்சாலைப்பிடித்தடைத்தான்
மெய்யானதேவரெல்லாமிகவேநொந்தார்
வன்னமுள்ளவீசனிதையறிந்துக்கொண்டு
வரவழைத்தாரொந்தனையுமகிழ்ந்துதானே. (கஎ)

தானென்றமணியாறுமுகமுமாக்கித்
தசவாய்வுபத்தையுமேகையதாக்கி

வேனென்றசுடாதனைவேலைதாக்கி
விதமானவக்கினியையூர்தியாக்கி
பாவென்றகிரகமதைவீராளாக்கிப்
படைசெய்த்துவாவென்றுபகர்ந்தாரீசன்
வாவென்றபூரணநாளத்தானைத்தான்
மகத்தானபூசைசெய்துமறுநாளிற்றானே. (௮௯)

சூரசம்மாரங்கூறல்.

மறுநாளிலசுரனிடந்தன்னிற்சென்று
வானவர்கள்சிறைவிடென்றுசொல்லிவிட்டேன்
உறுதியாய்ச்சினையாமலென்னைக்கட
வோகோகோபிடித்துவரச்சொல்லிவிட்டான்
சுறுதியாயவனோடெதிர்த்துநானுஞ்
சூரனையுமாறுநாட்கொன்றேவிட்டு
பிரமன்முதற்றேவர்களைமீட்டுக்கொண்டு
பெருமையுடனீசனிடம்வந்திட்டேனே. (௯௦)

வந்திட்டேனீசனென்னைமகிழ்ந்துபார்த்து
வலுவானவிந்த்ரபட்டமிருக்கச்சொன்னார்
மூந்திட்டயிந்திரனுஞ்சிவனைப்பார்த்து
மொழிகுவானினியானென்செய்வேனென்றான்
தந்திட்டவுத்தரப்படியேநீதான்
தாரணியிற்றசரதனாய்ப்பிறப்பாயென்றான்
எந்திட்டவின்னமொருகாரணமேயாகு
மியல்பானவிந்த்ரபட்டந்தாகுமென்றார். (௯௧)

தசரதனுற்பவங்கூறல்.

என்றுமொழிகேட்டுசுரலோகம்போனே
ரிடந்துவிட்டாரக்ஷதரும்பரந்தேயினும்
வென்றவொருதவம்புரிந்துத்தாரங்கேட்டார்
வெகுவாமுன்னுள்ளதெல்லாம்வினையைச்செய்தீர்
முன்றுமொருவரமளித்தீராயாவைத்து
முகத்தாலுமானைசெயிக்கமுடியாதென்றீர்

நின்றவொருவருமுகத்தால்வெல்லச்சொல்ல
நீர்கொடுத்தவரமதுதான்பொய்யுமாச்சே. (௱௧)

இராவணனுற்பவங்கூறல்.

ஆச்சென்றுசொன்னவசுரனையும்பார்த்து
வசம்பித்தாயதனாலேயழிந்ததென்றார்
போச்சுதென்றவென்வினையாற்போச்சுதையா
போகாதவரமொன்றுவேணுமென்றான்
வாச்சுதென்றவரங்கேட்டாற்றருமென்று
வாக்களித்தாரீஸ்வரனுமந்தவேளை
காச்சுதென்றதலைபத்தாய்ப்பிறக்கவேண்டுங்
கதித்தெழுந்தசத்ருவெல்லாங்கதிசொல்வீரோ. (௱௨)

இராமனுற்பவங்கூறல்.

சொல்லுமென்றவசுரனையுமீசன்பார்த்துச்
சுகமாகவிலங்கையிற்போய்பிறந்துநீயும்
வெல்லுமென்றதலைபத்தாயிருந்துகொண்டு
மேலானவிலங்கையரசாள்வாயென்றான்
அல்லுமென்றவரசனுமேயவடம்போனா
னப்போதுவீசனுமேயென்னைப்பார்த்து
வல்லதசரதனிடத்திலிராமனாக
வந்திருந்துராவணனைவதையென்றாரே. (௱௩)

இராவணசம்மாரங்கூறல்.

என்றதொருவுத்தாரங்கேட்டுக்கொண்டு
வியல்பாகயான்பிறந்தேன்ராமனாக
அன்றதொருதெசரதனுமென்னைப்பார்த்துக்
காரணங்கண்முடிக்கவும்வந்தாயோவென்றான்
வென்றதொருவேலையெல்லாம்பார்த்துக்கொள்வாய்
வேலையில்லையென்பதிக்குப்போரோனென்றான்
நன்றதொருகாரியந்தானென்றேசொல்லி
நான்வனத்திற்போம்போதுபோவென்றானே. (௱௪)

போவென்றவனம்புகுந்தேனந்தவேளைப்
பொல்லாதராவணனுமீனஞ்செய்தான்
ஆவென்றவில்லம்புமெடுத்துக்கொண்டு
வறுத்தறுத்துத்தள்ளிவிட்டேன்மூன்றுபேரை
மாவென்றராட்சதருமடிந்தபின்பு
மாறியேகடற்கரையில்வந்துசேர்ந்தேன்
தேவென்றநந்தியுமேயென்னைத்தேடி
தேகம்விட்டுவந்தாரொன்னிடமாய்த்தானே. (௧௫)

இராமேஸ்வரமுற்பவங்கூறல்.

தானென்றநந்தியவரொன்னைப்பார்த்து
தவமுடித்துக்கைலைக்குவருவதெப்போ
நானென்றாகூதுபாய்செனனஞ்செய்ய
நம்மாலேயாகாதுவினிமேலென்ன
வானென்றவீசனுடவருளைப்பெற்ற
வல்லவனேயெனக்குமொருவழிசொல்லென்றார்
மானென்றமைந்தனேநீயென்றுகூட்டி
மகாரமுதல்-உகாரம்வரைசெப்பினேனே. (௧௬)

செப்பினேன்மிருவிகற்பசமாதிநின்று
சிவநாட்டென்றேறைகைலைச்செல்வாயென்றேன்
அப்பினேன்மகாரமுதல்-உகாரங்கண்டு
மறிந்தாராமலிங்கமதுவவன்பேராச்சு
தப்பியேநாம்வந்தபின்விபீஷ்ணனும்வந்தே
நானில்விழவிலங்கைபட்டமவனுக்கீந்தேன்
ஒப்பியேலங்கைக்குமவனும்போனன்
வுடனெழுந்துவடவாசிற்சென்றிட்டேனே. (௧௭)

திருவரங்கமுற்பவங்கூறல்.

சென்றிட்டேன்செம்பவனமங்கேசென்றேன்
செய்மானவனமதிலேசமாதிநின்றேன்

அன்றிட்டே னாயிரமாம்வருடமாச்சு
வாத்தாருமங்குவந்தந்தரங்கள்சொன்னார்
வின்றிட்டாத்தான்சொன்னவந்தரங்கம்
விதமானவென்பேரும்ரங்கமாகும்
நின்றிட்டவாத்தாருஞ்சொன்னதாலே
நல்லதொருஸ்ரீரங்கமென்பேராச்சே (௱௪)

ஆச்சந்ததலத்தைவிட்டுகைலைசென்றே
னாச்சரியமாயீசனையழைத்துக்கொண்டு
காச்சென்றராவணனைக்கடிந்திட்டாயோ
காரமென்னைநந்திக்குக்கடாக்ஷித்தாயோ
பேச்சென்றவேலையதுவொன்றுண்டப்பா
பெரிதல்லமுடித்துவாவென்றுசொன்னார்
மூச்சென்றவுத்தாருஞ்சொன்னபோது
முடித்துவந்தாலுத்தாருஞ்சொல்லுமென்றேனே. (௱௫)

சொல்லுமென்றமொழிகேட்டீசன்றானுஞ்
சூரனுக்குமணியாறுதலையாறுச்சு
நல்லுமென்றவித்தையொன்றாச்சரியமாகும்
நலமானவஞ்சுமணியஞ்சுருபம்
வெல்லுமென்றுவொருமணிதான்மாயவனுமாகும்
மெய்த்திருக்குங்காரணத்தைமுடிப்பாயென்றேன்
வல்லுமென்றவீசனுடபாதம்போற்றி
வலஞ்செய்துவையகத்தில்வந்திட்டேனே. (௱௬)

பாண்டவர்களுற்பவங்கூறல்.

வந்துவிட்டேன்க்ஷத்திரியவம்மிசத்தில்
வல்லபிள்ளையைந்துருவாய்ப்பிறந்துக்கொண்டோம்
வெந்திட்டானெனந்தகப்பனந்தவேளை
விலகியேநான்வனத்தில்விலகினேன்
நந்திட்டமாயவனைத்தேடித்தேடி
தவஞ்செய்தோம்நாங்களொருவைந்துபேரும்
நந்திட்டான்றனையறிந்துமாயன்றானும்
நல்லதிரியோதனைவெல்லென்றானே. (௱௭)

வெல்லுமென்றமாயனையுங்கூடக்கூட்டி
வில்லம்புதானெடுத்துமேவிச்சென்று
வல்லதிரியோதனன்மேலுத்தரஞ்செய்து
வாங்கிவிட்டேனவனுயிரைப்பதினெட்டாநாள்
கொல்லுமென்றசத்துருவையெல்லாங்கொன்று
குடியாகவரசாட்சிசெலாட்செய்தேன்
நல்லுமணியாருமென்தாய்சேர்த்துகொண்டு
நலமானகைலாசந்தான்சேர்ந்தேனே. (௱௰௨)

நானுமென்றவீசனுந்தானென்னைக்கண்டு
நல்லதொருவேலையெல்லாமுடித்தாயென்று
வேணுமென்றகாரியந்தான்கேழ்க்கச்சொன்னார்
விளையாடக்கன்னியர்கள்வேணுமென்றேன்
பூணுமென்றலட்சுமியாளெட்டுதுற்கையெட்டுபேரும்
புகழாகவுந்தனுக்கேகிட்டுமென்றார்
காணுமென்றகன்னியரும்பத்தாதென்றேன்
கன்னியொன்றுக்காயிரமாய்சிருஷ்டித்தாரே. (௱௰௩)

தாவென்றபூமியிலேபெண்களெல்லாந்
தனுவாகவிவ்வளவுமாகச்சொன்னார்
பேறென்றவீசனுமுன்கிட்டுமென்றதாலே
பிரபலமாயவன்பேருகிருஷ்ணனுக்கு
சீரொன்றகன்னியரையெல்லாங்கூடிச்
சிங்காரலீலைகளுஞ்செய்துகொண்டேன்
வீரென்றவிசுவாமித்திரனும்வந்து
விளையாடுங்கன்னியொன்றுதான்கேட்டானே. (௱௰௪)

கேட்டபின்னானில்லாவிடஞ்செல்லென்றேன்
கெடியானவுத்தாரஞ்சொன்னபோதே
சாட்டிவிட்டபடிதோறும்வீடுசென்று
சாதகமாய்த்தான்பார்க்கவெங்கும்நின்றேன்
மூட்டிவிட்டதப்பாலேகோபமாகி
மும்முகின்தான்கணத்தனிலேவந்துசேர்ந்தான்
ஆட்டிவிட்டுநானவடம்வந்துசேர்ந்தே
அப்பவல்லோசாபத்தைப்பிடியென்றாரே. (௱௰௫)

## ஜெகன்னாதமூர்ப்பவங்கூறல்.

பிடியென்றனெரிசாம்பலாவாயென்றான்
 பெருத்ததொருமோசமென்றுபறந்துவிட்டேன்
துடியென்றதலையதனைவட்டமிட்டுத்
 தொல்லுலகில்விருக்ஷமதாய்முளைப்பாயென்றான்
நொடியிலந்தசாபத்தால்மரமதாக
 நோக்கினேனப்போதோர்தலமுண்டாச்சு
வடிவென்றவடிவுகளுங்கண்ணாவாய்கொண்டசம்
 வையகத்திற்ஜெகன்னாதமிதுதானுமே. (௩௰௬)

ஆமென்றகிருஷ்ணரூபஞ்ஜெகன்னாதந்தா
 னாச்சரியமதனைவிட்டுப்பட்சியானேன்
போமென்றகைலாசமதனிற்சென்றேன்
 பொல்லாதசாபமதார்கொடுத்தாரென்றார்
வீயென்றகோசிகன்றன்சாபந்தாலே
 வின்னமாய்ப்போச்சுதையோவென்றிரோகந்தான்
நாமென்றசாபமதையீந்தானென்றே
 நல்லவரும்போகனென்றுபெயரீந்தாரே. (௩௰௭)

ஈந்துவிட்டாரீசனுமேபோகனென்று
 யிதமானகலிமுடித்துவாநீயென்றார்
பாய்ந்துவிட்டேகைலைவிட்டுநாலோகத்திற்
 பரிவானகருமலையில்வந்துசேர்ந்தேன்
சேர்ந்துவிட்டகன்னியாளெனக்குச்சாபஞ்
 செபித்தாரோவிஸ்வாமித்திரருமப்போ
வாய்ந்துவிட்டகன்னியரொன்செய்வோமென்றும்
 வல்லகிருஷ்ணவென்றுமனம்வசனித்தாரே. (௩௰௮)

தாவொன்றமாலையணிப்பெண்கடன்னை
 தாணிதனில்வேற்றுருவமெடுத்துக்கொண்டார்
சீவொன்றவின்பசுகந்தருவேவெனென்றுஞ்
 செகந்தனிலெலீங்களும்போய்பிறப்பீரென்றும்
பேவொன்றபெண்களுக்குச்சொன்னதாலே
 பிறந்திருந்தார்மூதற்சாதிப்பெண்களாக

காரொன்றகருமலையில்யானும்வந்து
　　கருவானபிள்ளைகொண்டுகைக்கொண்டேனே. (௱௰௯)

கொண்டதொருபிள்ளைதனக்குபதேசித்துக்
　　குவலயத்திற்பெண்கொண்டுவாருமென்றேன்
கண்டதொருசாதியெல்லாம்வேண்டாம்பிள்ளாய்
　　கருவானமுதற்சாதிப்பெண்ணேவேணும்
அண்டபுவனத்திலாயிரத்திலொன்று
　　வசிதாகப்பிறந்திருக்குமதுதான்வேண்டும்
விண்டதொருகருக்களெல்லாஞ்சொல்லிவைத்து
　　மேலானவஞ்சனமுஞ்செப்பினேனே. (௱௨௰)

கல்-பெண்ணுருவானவை-கூறல்.

செப்பினேனஞ்சனமுஞ்செய்யத்தானுஞ்
　　செகத்திலொருகருத்தேடிவாநீயென்றார்
அப்பினேன்கண்ணாடியொன்றுசெய்து
　　வதனாலேயாச்சரியமெல்லாந்தோன்ற
ஒப்பினதோர்பெண்கள்தனைக்கொண்டுவந்தா
　　லொருநாள்தான்செய்ததொருமார்க்கங்கேளு
கப்பினதோர்கல்லொன்றையுபதேசித்துக்
　　கன்னியைப்போற்கொண்டுவந்துகாட்டினாரே. (௱௨௧)

காட்டினார்கல்லதனைப்பெண்ணைப்போலக்
　　கற்றவித்தையென்னிடத்திற்காட்டவென்று
மூட்டினேன்காக்கையெனும்பரவையாகி
　　முப்பிறப்புபிறக்கவென்றுசாபமீந்தேன்
நாட்டினேன்கவடியெல்லாமணிதனொன்று
　　நல்லபிள்ளையென்றுசொல்லிநடந்துவிட்டேன்
கூட்டினேன்குருந்தமாமிழலைப்பார்த்துக்
　　குறித்ததலமிதுவென்றுபள்ளிகொண்டேன்பாரே. ( )

காணப்பாகடையுகமேமுடிவதாகிக்
　　கடல்பொங்கிச்சங்கமதுவிந்துபோச்சு

நாணப்பாகட்டையைப்போல்கிடந்துவிட்டேன்
நல்லதொருநாகமதுகத்திக்கொண்டு
தோணப்பாசமுத்திரத்தாணடங்கும்போது
துலையாதகருக்கடலிற்சென்றிருந்தேன்
வீணப்பாபாற்கடலிற்றுயின்றுவென்று
மெய்யாகச்சொல்லுவதுயிதுதாமுமே. (௩௨௬)

ஆமப்பாதேவர்கள்தானென்னைத்தேடி
யாரோர்காலாங்கிஐயர்தன்னைக்கேட்டார்
நாமப்பாயிருக்குமிடமவருஞ்சொல்ல
நாடியேபாற்கடலில்வந்துசேர்ந்தார்
ஓமப்பாவெந்தனையுந்தியானஞ்செய்தா
ருடனேமூழ்ந்துவிழித்துயான்பார்த்தேனப்பா
வேமப்பாவெல்லார்க்குமயிர்தமீந்தே
வெண்மைபெருந்தயிர்க்கடலுமமிர்தமாச்சே. (௩௨௭)

ஆச்சுதப்பாபாற்கடலிற்றுயின்றதாலே
யழகானதயிர்க்கடலுமதுதானாச்சு
வாச்சுதப்பாபருதிவொளிப்பட்டதாலே
வல்லதயிர்நெய்க்கடலுமாச்சுதாச்சு
நீச்சுதப்பாவகஸ்தியருமதனைக்கண்டு
நிலையாதவுவர்க்கடலுமாக்கிவைத்தார்
ஓச்சுதப்பாசக்கடலுமூரிலாச்சு
வுத்தமனேயம்பூலக்கரும்புதானே. (௩௨௮)

தானென்றகுத்தகடல்கமண்டலத்திற்கொண்டார்
தப்பாமல்நற்கடலைவயத்துள்வைத்தார்
வேனென்றகடலானதேழுமாச்சு
வெண்சதுராகிரியில்வந்துகுடியாய்யின்றேன்
நானென்றபெண்களும்லோகத்தில்வந்து
நாருடையவுருபமதாய்ப்பிறந்தாரப்பா
ஊனென்றமனிதருக்குக்கட்டிவைத்தார்
வுடனுடனேவித்தையதாயறுத்தார்பாரே. (௩௨௯)

பாரப்பாவந்தவொருபெண்களைத்தான்
    பரிவானகுடித்தனத்திலாகாதென்று
தீரப்பாசமுத்திரத்தோர்தீவுதன்னில்
    தீதானகாட்டினிலேகொடுபோய்விட்டார்
வீரப்பாகனிகிழங்குவதனைத்தின்று
    வெறுத்தகடாதேகமெல்லாம்வெண்மையாக
ஆரப்பாவப்பவுள்ளமனிதரெல்லா
    மற்பவயதல்லவேபூரணமுமாமே, (௱௨௭)

ஆமென்றமனிதரிடவுயிர்போகாம
    லாச்சரியந்தானிகனிற்புதைத்துவைப்பார்
நாமென்றதொட்டவெனைத்தொட்டாரெல்லாம்
    நாட்டிலேயிறந்ததல்லாற்சாவோயில்லை
வேயென்றகவனமதுபோட்டுக்கொண்டு
    வெகுதேசஞ்சுத்திவந்தேன்வெகுநாள்தன்னில்
போமென்றபெண்களெல்லாம்வெளுப்பாய்க்கண்டேன்
    புகழானபூமியிலேயிறங்கினேனே. (௱௨௮)

இறங்கிவிட்டேனிருந்தவொருபெண்களெல்லா
    மேகவெண்மையெதனாலேயாச்சுதென்று
வரங்கிவிட்டபூமிதனையானும்பார்த்து
    வழலையுடகாரமதுசொல்லப்போகா
கிறங்கிட்டேன்காரமதுபார்த்துப்பார்த்து
    கிடையாதேவன்பத்தாருலகுதன்னில்
உறங்கியுடன்வழலைக்குயுயிருண்டாக்கி
    யுற்பனமாய்வேலையெல்லாந்தொடங்கினேனே. (௱௨௯)

தொடங்கினேன்பெண்களுடன்கூத்துமாடித்
    தொலையாதபிள்ளைகளும்பிறந்ததப்பா
அடங்கினதோர்சரக்குவகுபத்தினாறு
    மங்கிருந்தகாரமதாய்ச்செய்துப்பார்த்தேன்
மடங்கினதோர்சரக்கெல்லாங்காரங்கார
    மகத்தானசித்தர்களுங்காணமாட்டார்
புடங்கினதோர்சரக்கையெல்லாம்பிள்ளைகட்கு
    பூரணமாய்ச்சொல்லிவைத்தேன்புத்திதானே. (௱௩௰)

புத்தியென்றபிள்ளைகட்குபரிவினமேசெய்து
பிரித்தவளைப்பதினெட்டுத்தொப்பியாக்கி
சித்தியென்றகாயசித்திகவனஞானஞ்
சிவயோகமுதலாகவுரைத்துவைத்தேன்
வெற்றியென்றவித்தையெல்லாஞ்சொல்லிவைத்து
விளங்குவாய்ரெண்டுசகஸ்திரந்தானென்று
பத்தியென்றசத்திசொல்லின்படியேகேட்டால்
பாரான்வாயென்றுவரங்கொடுத்திட்டேனே. (௫௱௧)

கொடுத்துவிட்டேனதனைவிட்டாகாசமார்க்கக்
குளிகையிட்டுப்பறந்தேனப்போதுகண்டு
அடுத்தவெண்ணைமைந்தரெல்லாமையமென்று
ரப்பாமேசொல்லோவாம்விள்ளாதேயென்றேன்
தொடுத்திட்டார்பராபரனையென்றுசொல்லித்
தோத்திரங்கள்செய்திருக்கமுத்தியென்றேன்
விடுத்திட்டாரவர்களையும்விட்டுநீங்கி
வெகுசுருக்காய்பாங்கொடிற்சென்றேனே. (௫௱௨)

சென்றிட்டேனிறைந்ததொருமலைபூநீர்
செகத்திலேகிடையாதசுருக்குமெத்த
அன்றிட்டேனீந்தனமுமதிகமென்று
வங்கிருந்துசாக்குகளைவைத்துப்பார்த்தேன்
வென்றிட்டசாக்கையுத்தாண்வேதைசெய்தேன்
வெகுசுருக்குவெகுசுருக்காயிருந்தேனமு
கன்றிட்டேனந்தவொருபதைக்கண்டு
கற்பமுண்டிருந்தேனவ்வூரிற்றானே. (௫௱௩)

ஊரென்றவூர்தனிலேயிருக்கும்போது
வுடன்சாபங்கொடுத்தபிள்ளைத்தேடிவந்தார்
காரென்றபிள்ளைகட்குச்சாபந்தீர்த்துக்
கற்பமதுவங்குவைத்துவுண்ணச்சொன்னேன்
தேரென்றவுபதேசஞ்செப்பிவிட்டு
செகத்திலேவந்துவிட்டேன்சித்திவானோ
நேரென்றமருந்துமாமலையில்வந்தேன்
நெடுமலையாசுகந்தனம்பிடுங்கினேனே. (௫௱௪)

பிடுங்கியேவங்கிருந்துகொங்குதேசம்
பூமியிலேவைங்கிவைத்துவன்னங்கொண்டான்
அடங்கியபின்சென்றுவந்தமலையிலேறி
யழுத்தினேன்பாதாளமுருவத்தானே
தொடங்கியென்றாசுநனுமலையைத்தூக்க
தூக்குமொருபுறஞ்சற்றேயெழும்பக்கண்டு
ஒடுங்கியதோர்காலடிவூணினதேயென்று
வுயர்வேறிப்பார்த்தேனேசுத்திதானே. (௭௩௫)

சுத்தியேயென்னைப்பார்த்தான்கண்ணிற்காணான்
சுருக்கானபுளியமரமிழலினின்றேன்
வெற்றியாயிலைதொறுமாராய்ந்துபார்த்தான்
வேனுடனேதெண்டுகொண்டோரிலைக்குனின்றேன்
யுத்தியாயவன்றானுமென்னைப்பார்த்து
வுயர்நின்றுகீழேநீயிறங்குவென்றான்
சுத்தியேசொன்னதினால்வருவதில்லை
காரணமாயென்மலையைவிட்டேன்தானே. (௭௩௬)

விட்டனென்றசொற்கேட்டுக்கோபஞ்செய்து
விளையாட்டுப்பிள்ளையென்றுசண்டைசெய்து
குட்டனென்றுகூக்குரலிட்டுத்தள்ளவந்தான்
குறியறிந்தவராருமங்கேவந்து
அட்டையென்றுவனமனதைக்கட்டிவிட்டு
மறிவானபுத்திரனுற்பவமேசெய்து
தொட்டனென்றுசொல்லடாயிடும்பாவென்று
துலங்கவேபெயராதுவுமீந்தார்தானே. (௭௩௭)

ஈந்துவிட்டுவிடும்பனையுமுருத்தான்பார்த்து
யிவன்றனக்குயேவலாயிருநீயென்றார்
காய்ந்துவிட்டகாய்கனிகள்கொண்டுவந்து
கடாக்ஷித்துவாறற்குங்கொடுத்தேன்யான்
பாய்ந்துவிட்டவாறருமென்னைப்பார்த்து
பழம்வேறேயல்லவைப்பாபிடிநீயென்றார்
வாய்ந்துவிட்டவாறாம்மலையைவிட்டு
வளமானதன்கிரியிற்போய்ச்சேர்ந்தாரே. (௭௩௮)

தாவொன்றவிடும்பனையுந்தானும்பார்த்து
தாரணியிற்கலக்கம்பைக்கட்டிவைத்தாய்
ஆரடாவுனக்கிந்தபுத்திசொன்னா
ராச்சரியமாகவொருசித்தைப்பாரு
ஊரொன்றவூரிலுள்ளவுயிரையெல்லா
மொருசித்தாயாட்டிவைப்பேனுலகையெல்லாம்
நேரொன்றகாவடிதானென்றுக்கப்பா
நிகரில்லாக்காவடிகள்வருவிப்பேனே. (௱௩௯)

வருத்தாலேவஸ்துசித்தியெல்லாங்கொள்வாய்
வந்துதொருவயிர்தமெல்லாநமக்காமென்றேன்
கருத்துவந்தவவன்றானும்வணங்கிக்கொண்டு
கட்டளையயிட்டபடிகேட்பேனென்றான்
திருத்தவேயவனார்தானென்றுகேட்டால்
திரமானமுதல்யுகத்தில்வயிரவனுமாகும்
பருத்தவொருவீரவாகுதேவராகும்
பகருகின்றவனுமானும்வீமன்தானே, (௱௪௰)

தாவென்றவிடும்பனொடுகடம்பனுருங்
தப்பாமலவனுமொருதேவனாகும்
வேவென்றதேவனைநான்வைத்துக்கொண்டு
வெகுசித்துவாடிவிட்டேன்சித்தர்பார்த்து
நாவென்றசித்தாகுஞ்சித்தேதென்று
நலமானவகஸ்தியனுமிக்கேவந்தான்
வாவென்றவாலசுப்பிரமணியாவென்றும்
வல்லகுருவென்றுமென்னைக்கட்டிவிட்டாரே. (௱௪௧)

கட்டிவிட்டார்யானிருக்குமூலஞ்சொன்னேன்
கருணையதாயனுபோகமூலங்கண்டான்
ஓட்டிவிட்டானவனுமொன்றுதானே
மூலகத்தில்மோகமதுகொஞ்சமாச்சு
வெட்டிவிட்டார்மாலாய்நான்சேர்ந்ததாலே
வெஜயமானவகஸ்தியன்மால்வாவாவென்றேன்
விட்டுவிட்டானிருவருமேவெவ்வேறாகி
விதமானநாட்டினிலேயிரங்கினானோ, (௱௪௨)

ஓமப்பாவங்கையொருகன்னிதன்னை
யுறவாகக்கலியாணஞ்செய்துக்கொண்டான்
நாமப்பாவப்படியோர்பெண்ணைத்தானும்
நலமாகமணம்புரிந்துக்கொண்டேனப்பா
ஆமப்பாயிருவருமேபிள்ளைபெற்று
நலர்பிள்ளைக்காதியுடதவமேசொன்னார்
வாமப்பாவெந்தனுடபிள்ளைக்கேதான்
வல்லபங்கவொருபங்கியானிடஞ்சொன்னேனே-(௱சங)

சொன்னதொருவுத்தாரம்பிள்ளைகேட்டுச்
சுருக்காகமேல்நோக்கிப்பார்த்துக்கொண்டான்
அன்னதொருவவர்பிள்ளைகீழேபார்த்து
அண்டாண்டமறியாமல்மயங்கினன்பார்
வின்னமில்லாப்பிள்ளையதுமேலேபார்த்து
வினைவில்லையென்றுசொல்லிமொட்டையிட்டான்
தன்னையவன்கீழ்ப்பார்த்துவளர்த்திப்பார்த்து
தான்சிகைவைத்துக்கொண்டுவளர்த்திட்டானே.(௱சச)

இட்டதொருசத்திசிவமிருகூர்பார்த்து
யிதமானசத்திக்காபரணம்பூண்டான்
வட்டதொருபூமிசத்திசிவமேயென்று
வளமானபீஜமிலம்படலாகாதென்று
மட்டதொருமணமறிந்துமண்டிபோட்டு
மகத்தானதொருவாயுந்தான்தெளிந்துக்கொண்டான்
சட்டதொருவொழிந்தவிடஞ்சுத்திசெய்து
சற்குருவாம்புருவமிலைகாட்டுவானே. (௱சரு)

காட்டுவான்சார்வென்றுஞ்சகலமென்றுங்
காண்பதொருமனிதருக்குச்சலாம்சலாமென்றும்
மூட்டுவானல்லாவல்லாவென்று
முடித்ததொருயமபுரத்தினைடுக்கவென்றும்
நாட்டுவான்பள்ளிகொண்டவாசலென்றும்
நயனத்தின்மேல்நோக்கிநாட்டச்சொல்லி
ஆட்டுவான்வேதமடாகடந்தவேத
மாச்சரியமதைவிட்டாவில்லைதானே. (௱சசு)

தானென்றவகஸ்தியர்தன்பிள்ளைதானுஞ்
சத்திசிவமிருவருக்காபரணம்பூண்டான்
மானென்றமனந்தனிலேசிலந்தானென்று
மயங்கியவன்மனநோக்கிக்கைகுவித்தான்
வேனென்றபூமியிலேவீழ்ந்துவீழ்ந்து
விதமானபீஜபிலம்பற்றவீழ்ந்தான்
நானென்றவெந்தன்பிள்ளைகளும்பார்த்து
நலமறியாமூடனென்றுநயந்திட்டாரே. (௱௪௭)

நயந்திட்டார்காயத்திரியுபதேசமென்று
நல்லதொருவுபநயனம்பூணுவிட்டான்
உயர்ந்திட்டருத்ராக்ஷவிபூதிபூண்டா
னுயிர்நிலையையறியாமற்சிவஞ்செபித்தான்
துயர்ந்திட்டவெந்தனுடைமைந்தன்றானுந்
தூண்டியிட்டுவுயிர்நிலையைப்பிடித்துக்கொண்டான்
ஆய்ந்திட்டமுதல்வேதங்கடைவேதந்தா
னாச்சரியமெனதுமைந்தரறிந்தார்தானே. (௱௪௮)

தானென்றவகஸ்தியருநானுங்கூடி
ஸ்தாபித்தவேதமதுபின்னும்ரெண்டு
வேனென்றசத்தியவேதங்கள்ரெண்டாம்
விபரமதைக்கண்டவர்களிவர்களாகும்
நானென்றபிரம்மத்தைக்கண்டவர்களெல்லாம்
நல்லபிரம்மகுலமதுதான்பிராம்மணனாகும்
கோனென்றசமண்வேதம்மூன்றும்வேதங்
கூறியதோர்கடைவேதந்துலுக்குமாமே. (௱௪௯)

ஆமென்றபிரமனுக்குச்சிகப்புமாகு
மாச்சரியம்ருத்திரற்குவிபூதியாகும்
நாமென்றவிஷ்ணுவுக்குநாமமாகும்
நலமானவியமனுக்குகரிகோடாகும்
வாமென்றமகேஸ்வரற்குவொன்றுமில்லை
மகத்தானநிர்வாணமாகுமாகும்
ஓமென்றபிரணவத்தையறிந்தோர்க்கெல்லாம்
வுணர்வில்லைவேதமெல்லாமொன்றுதானே. (௱௫௰)

ஒன்றானவகஸ்தியருமூலந்தன்னில்
　　வுயர்ந்தவொருகைலாசந்தனைக்கண்டு
அன்றானவீசனுமேயனுப்பினைத்தா
　　ராதியிலேயவர்முன்னேவந்துசேர்ந்தார்
நன்றானமனிதர்கள்விக்கினமேதீர
　　நலமானவயித்தியத்தால்வியாதிதீர்த்தார்
வென்றானவீஸ்வரனுங்கையிலேயென்று
　　விதமானவகஸ்த்தியர்க்குவந்ததாமே. (௱௫௧)

வந்ததால்வரும்விக்கினேஸ்வரற்கு
　　வல்லவொருவகாரந்தால்வாகனமுமாகும்
சொந்தமாயுலகிலிருக்கறப்பத்தையாடித்
　　துலையாதவுள்வினையையறுக்கச்சொன்னார்
அந்தரங்கங்கண்தெரியாமூடர்க்கெல்லா
　　மறிவானஞானக்கண்திறக்கவைத்தார்
விந்தமாங்கலசமதின்வியாருஞ்சொன்னார்
　　விதமாகவாயிரம்பேர்க்கருளினாரே, (௱௫௨)

அருளினார்திறக்கவந்தான்வழியுஞ்சொன்னா
　　ராச்சரியமதனாலேகாண்டதானார்
ஓமென்கிறார்கும்பத்திற்புகுந்துக்கொண்டார்
　　வோங்காரபஞ்சாக்ஷரத்தையறிந்துக்கொண்டார்
ஊரிலுள்ளமனிதர்களுஞ்சொல்வதொன்று
　　வுயக்ரமவரிடத்தில்வந்தாகும்பியென்றார்
சார்விலிடமதைத்தயுந்தானென்னசொல்வேன்
　　சாற்றுகிறேனாச்சரியமொன்றுதானே. (௱௫௩)

நானென்றவன்னைவற்குவந்தபேற்றைத்
　　தாரணியிற்சாற்றுகிறேன்கேண்மோமைந்தா
கோனென்றகும்பத்திற்பாய்ந்ததாலே
　　கோதில்லாக்குடவயிறுதானுமாச்சு
வேனென்றதும்பியதுவடைவதாலே
　　விதமானதும்பிமுகமவருக்காச்சு

வாக்கினுல்வல்லபையேயென்றுசொல்லி
மகத்தானநாமமது கொடுத்திட்டாரே. (௱௫௮)

கொடுத்திட்டாரவருமூத்தசாதியென்று
கூடவேவைத்திதொன்றுங்கூறிவைத்தார்
அடுத்திட்டகவிமுடிந்தவத்தியாறு
லாச்சரியமெல்லாந்தான்காண்டாயென்று
விடுத்திட்டார்விநாயகனும்பெண்ணைக்கூடி
விதியோடேபூசையதுசெய்யுக்கொண்டார்
தொடுத்திட்டபூசையதுசெய்ததாலே
துலங்கியதோர்மங்கையவன்தானுமாமே. (௱௫௯)

ஆமென்றவிப்மார்க்குஞ்செய்தமைந்தமங்கை
யாச்சரியமிகொண்மணியுமவள்தானுகும்
வாமென்றவில்வார்க்குமுகுத்திரர்க்கும்
மகத்தானவிலக்குமிக்குஞ்சரஸ்வதிக்கும்
நாமென்றநாரத்சாதிப்பெண்களுக்கும்
நாடிவேளைத்தாஞ்சாதியிவள்தானுகும்
வேமென்றவைகஸ்தியருங்கிதிரையெல்ல
வெகுமருந்தபாடியதால்விநாயகனுமாமே. (௱௬௰)

தன்னையறியும்-விபரங்கூறல்.

ஆமென்றகாலாங்கியையர்தானு
மருளினாதிதலைவியாமெல்லாம்
கேமென்றவிண்டத்தின்விபரங்கேளு
நிலையானபொருளையெல்லாநினைவாய்க்கேளு
வாமென்றவெளியினதுபூசைகேளு
வல்லபித்துவாடும்விளையாட்டைக்கேளு
தாமென்றவிருசார்வுமுலைமெல்லாஞ்
சாற்றுகிறேன்சமாதிநிலைசாற்றுவேனே. (௱௬௧)

சாற்றுகிறேன்கருவூரான்கொங்கணருமப்பா
சஞ்சலங்களடங்குமிடம்நிலைதான்பாரு

கோத்துவேனென் சாணுஞ்சடலந்தன்னிற்
    கோர்வையாய்நிற்பவர்தானார் தான்கேளு
பாத்துவேன்பூமியென்றபூமிதானும்
    பருவமாய்சிவன்சத்தியிருவர்சேர்ந்தார்
தேத்துவேனண்டத்திலுள்ளதெல்லாந்
    திறமானபிண்டத்திற்காட்டுவேனே. (௱௬௨)

காட்டுகிறேன்நாலும்ரெண்டும்பிருதிவியாகும்
    கருவானபடம்ரெண்டும்பூமியாகும்
மூட்டுவேனறுசத்திசிவமுமாகும்
    மொழிந்ததொருபூமியின்மேல்வாய்வதாகும்
சாட்டுவேன்வாயுவென்றவிருகாலண்டஞ்
    சமஸ்தானமதன்மேலேபிரமனண்டம்
நாட்டுவேன்பிரமனாசனமுமாக
    நான்முகனும்வீற்றிருக்குமூலமாமே. (௱௬௩)

மூலமென்றசதுர்முகன்றன் சிருஷ்டிப்புத்தான்
    முடிவானவாசனைமேற்சுழியிங்கிலேழ
ஞாலமென்றவவ்வண்டவாயுமாகும்
    நாடியதோர்பிரமனென்றகுயவனாகும்
ஜாலமென்றவேழ்வியதுகுயத்தியாகுஞ்
    சமர்த்தானசிருஷ்டிப்பால்வாணியாகும்
வாலமென்றவிருவருமேசேர்ந்துக்கொண்டே
    வையகத்தைசிருஷ்டித்தாரிவர்கள்தானே. (௱௬௪)

தானென்றபிரமனுக்குவன்னந்தன்னை
    தலந்தோறும்வாகனமாயமைக்கவேண்டும்
வேனென்றபிரமனுக்குபீஜமென்றால்
    விளங்கிநின்றநாற்கோணமுக்கோணந்தான்
கோனென்றசிகாரமொடுசகாரம்போட்டுக்
    குறியானமம்மென்றுசத்தியேதான்
வானென்றமகாரமொடுவேவேவென்று
    வனுபிரணவபிரம்மாவேவாவென்றாரே. (௱௬௫)

வாவென்ற-உகாரமிட்டெழுதும்போது
வல்லபிரம்மனண்டமதுகண்ணிற்றோன்றும்
தாவென்றவன்னமதுபிரம்மாவைத்தான்
தாங்காமற்றெழில்கள்செய்வனகாத்தாலே
தாவென்றவாகனந்தான்செய்யுமார்க்கஞ்
சலம்வேறுபால்வேறாய்ப்பிரித்துவைக்கும்
ஆமென்றபிரம்மலோகதேவதைகள்முப்பதுவர்
மதுன்மேனலங்குலத்தானதுண்டாமே. (௱௯௬)

தாவென்றவதனுள்ளேசத்தியாகுந்
தலமானபிரமன்ஸ்தாபிக்குமிடமதுவாம்
ஈவென்றபிரமனதுவெல்லைதானு
வெட்டுகொண்டுயோசனைதான்விஸ்தாரமாகும்
பாவென்றகதிரவனுர்வதிக்குமிடமாகும்
பகருகிறேன்பண்பொன்றிப்பாரின்மீதே
வாமென்றமையந்தாவாதித்தனென்னும்
வல்லதொருப்பாப்பின்கிழிருகால்கேளே. (௱௯௭)

கேளப்பாவைங்கோணமைந்திதழுமாகுங்
கெடியாகவதனைநின்றுக்கோணந்தான்
வாளப்பாவம்மென்றவெழுத்துமாகும்
வளமாகவைந்துமூன்றெட்டுமாகும்
நாளப்பாவெட்டிதழுமெட்டிச்சத்தி
நலமானபிருதிவியப்புமொண்டுஞ்சேர்ந்து
நீளப்பாவிங்நீளந்தன்னிலேநான்
கெடிதானகம்பம்ரெண்டிற்சேர்த்துதானே. (௱௯௮)

தானுருவாய்நின்றதொருகம்பந்தானுந்
தலமாகுமஞ்குருவாணியாணி
வானுருவியிங்குதிக்குஞ்சாகாக்காலும்
வல்லசத்திசிவமதுவாய்நின்றகால்தான்
ஊனுருவிச்சத்திக்காற்கீழேகாட்டி
யுயர்சிவத்தின்காலையுந்தான்மேலேகாட்டி
நானுருவிக்கண்டதொருமார்க்கமென்று
நலமானமாவசிக்குக்காட்டினேனே. (௱௯௯)

காட்டினேன்மாவலிதான்சிரசுதொட்டு
    காட்டினலறிவனென்றுவென்னைக்கேட்டான்
மாட்டினேன்காலாங்கியுருத்திரனார்காலை
    மயக்கமாய்வைத்துபானமூழ்த்திக்காட்டக்
கூட்டினன்காலாங்கிகுருகலைக்கண்டு
    கூட்டைவிட்டுப்போகாமற்சிரஞ்சீவியாக
நாட்டினன்ஜெகத்தையுந்தான்பொட்டலாக்கி
    நல்லதொருமகாரத்தால்வாழ்த்திட்டேனே. (௱௭௰)

இட்டதொருகுண்டலிதாயிருக்குந்தானம்
    யிதமானபிரம்மாவும்விஷ்ணுவுந்தான்
சட்டதொருருத்திரன்மகேஸ்வரன்தான்
    சமத்தானநாற்காலாய்திருத்திக்கொண்டு
நட்டதொருகால்மேலேசதாசிவத்தை
    நலமானபலகையாய்நாட்டிக்கொண்டு
இட்டதொருவீஸ்வரியாயிருந்துக்கொண்டு
    இருஷ்டிப்பாளண்டாண்டந்திருஷ்டிப்பாளே. (௱௭௧)

பாழென்றயுகமதுதான்முடிந்தகாலம்
    பரப்ரம்மசத்தியாயழியாசத்தி
வானென்றசத்திக்குளடங்குமென்பார்
    வல்லசத்தியுள்ளடங்கும்படிதானப்பா
ஆளென்றகுண்டலிதாயிருக்குமூலை
    மறிந்துநீயற்சித்தாற்குருவைக்காண்பாய்
தானென்றகால்பிடித்துவேறும்போது
    தன்னுமடாகாற்றுவனுவேகங்காணே. (௱௭௨)

காணப்பாகாற்றுக்குமேலதாகக்
    கனசோதிமெத்தவடாசப்தமேகம்
தோணப்பாமழைபொழியுமிருணக்கமூந்
    தொந்திரவாற்செந்தவர்கள்கோடாகோடி
வீணப்பாவதன்மேலேதப்பிச்சென்றால்
    விண்ணொளிருங்கதிரவர்கள்கோடாகோடி
காணப்பாவிழிதிறக்குமுன்னேமுன்னே
    கலமானவொளிவீசுங்கண்கொள்ளாதே. (௱௭௩)

கொள்ளாதவானந்தங்காணவென்றாற்
    கொழுந்துவிட்டுவெளியுமதுவன்னிவிருட்சம்
உள்ளானருண்டவிதானடுக்கவுண்டு
    வுற்றதொருகற்பமெல்லாமங்கேகொண்டு
அள்ளானதேகத்தைசுத்திசெய்து
    வப்புறமேசென்றாலாச்சரியங்காண்பாய்
விள்ளாதசோதியதுவெளியிற்காணும்
    வேதியருமிருக்குமிடங்காணலாமே. (௱எச)

காணலாம்வண்ணன்வண்ணத்திதானுங்
    கருவானவழலையினல்திருஷ்டிசெய்வார்
பூணலாமவர்களைநீகண்டாயானாற்
    பொன்னானதக்கம்வெள்ளிசித்தியாகும்
தோணலாமதன்மேலேயடுக்குமொன்று
    துலங்கியதோர்பொதிகையென்றுசொல்லவாகும்
நாணலாமவரைநீகண்டாயானால்
    நல்லசித்தனென்றுசொல்லிப்பேரீவாரே. (௱எரு)

வாரானகும்பமுநிவாட்கையோடு
    வல்லபையோடாயிரம்பேர்வாழ்ந்திருப்பார்சித்தர்
போரானவுலகதனிற்கன்னிமூலை
    பேசாதமவுனத்தாற்போய்நீசேரு
ஆரானவவர்களுக்குமேலேயப்பா
    வாயிரத்தெண்ணிதழோடேகமலமொன்று
கூரானகூறிருந்துசென்றுநீதான்
    குடியிருக்கவீடதுதானிலைத்துப்போச்சே. (௱எசா)

போச்சப்பாவவரிருக்குமண்டமேலே
    புகழாகவிருகமலம்பூர்த்துநிற்கும்
வாச்சப்பாலட்சுமியுமாலுமாக
    வசித்திருக்குங்கமலமடாமிரண்டுமாகும்
மோச்சப்பாமோகனப்பெண்ணதிலேநிற்கும்
    மூடியாதுவவளுடையமோகமெத்த
காச்சப்பாகண்டத்தின்கிழேயானுங்
    கருவானகருத்தின்மேல்வாழுவோமே. (௱எஎ)

ஆமென்றபுருவத்தின்கீமேறிற்பா
ளவன்செய்யுமானந்தஞ்செப்பப்போகா
நாமென்றவகஸ்தியரிடம்பேருபெற்றால்
நலமானமயக்கமெல்லாந்தீருந்தீரும்
வேமென்றநவகோணம்விட்டுநீயும்
விதமானவிந்துவிட்டுக்கோணமிட்டு
ஓமென்றவகஸ்தியனாயக்கேவைத்து
ஓம்-ஸிவியும்-அங்கு-ஸிங்கு-ஆம்-ஆம்-என்னே. (௱௭௮)

என்றுதான்ரீங்காரம்சிவாவென்று
யிதமானநவகோணத்துள்ளேயிட்டு
நின்றுதானென்றுகக்கால்களுணி
நேயமுள்ளமாயவனேக்காணலாகும்
நன்றுதானறுகோணமறைத்துக்கொண்டு
நலமானவோரிதழுமதன்மேவிட்டு
ஒன்றுதான்விந்துவிட்டுக்கோணத்துள்ளே
ஓங்காரம்நடுவிட்டுச்சுற்றிக்கேளே. (௱௭௯)

கேளப்பாநகாரமொடுசகாரமிட்டுக்
கெடியான அகாரமொடு-உகாரமிட்டு
மீளப்பா-வகாரமொடு-ஆம்-ஆம்-என்று
மிலைத்தகொருசுக்கிலவர்ணனேநுவாவென்று
வாளப்பா-வசியநம-வென்றுதானும்
வல்லவுருவாயிமேசெபித்தாயானால்
சேளப்பாவில்லையுருத்திரனார்வீடு
கொம்பேறிக்காட்டுவார்விமலவீடே.... (௱௮௰)

வீடானவுருத்திரனார்வீடு கேளு
விளங்குகின்றகங்காளர்வசிக்குவீடு
வாடானகாலகண்டன்வினையாடும்வீடு
வல்லவொருருத்திரனார்வாழும்வீடு
ஏடானவுச்சிவெளிதிறக்கும்வீடு
யிதமானதிரிசூலம்பிடித்தவீடு
தாடானவாசியதுசுழிக்கும்வீடு
தயவானநாற்பத்திமூக்கோணவீடே. (௱௮௧)

